# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | அம்மா என்ற ஆன்மா |
| ஆசிரியர் | : | ப்ரக்ஞன் [Prajnan] |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| முதற்பதிப்பு | : | 2019 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 16 |
| தாள் | : | A5 (5.83" X 8.27") |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | பராபரம் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அக விழிப்பு |

# அம்மா

# என்ற

# ஆன்மா

(சிறுகதை)



நூல் ஆக்கம்

## ப்ரக்ஞன்

ஓம் தத் சத்!

# அம்மா என்ற ஆன்மா

**(சிறு கதை)**

பிரபஞ்சம் என்ற ஊரில் **"ஆன்மா"** என்ற பெயரை உடைய அனைத்து கலைகளிலும் வல்லமை கொண்ட மகா சக்தியாக ஒரு அன்பான **அம்மா** இருக்கின்றாள்.



அவளுக்கு **"ஜீவன்"** என்ற ஒரு அழகான **மகன்** இருந்தான். இவள் தான் பெற்றெடுத்த ஜீவன் என்ற மகனை தனக்கு நிகராக அனைத்து கலைகளிலும் வல்லமை உடையவனாக வளர்க்க விரும்பி, அவனிடம்

அதிகப் பிரியம் கொண்டு, அவனை மிகுந்த அன்புடனும், ஆனந்தத்துடனும் வைத்திருந்தாள்.

தன்னுடைய மகன் தன்னைப் போன்றே சக்தி உடையவன் என்பதையும், தன்னிலிருந்து வேறானவன் அல்ல என்பதையும், அவன் அறிந்துக் கொள்ளாமல் அலட்சியமாக இருக்கின்றானே எனக்கருதிய அந்தத் தாய், அவனுக்கு இதைப் புரியவைக்க விரும்பி, அவனுக்கு நல்லது, கெட்டதை எடுத்துக்கூற ஒரு பகுத்தறிவு கொண்டவன் தேவை என்பதற்காக **“புத்தி”** என்ற ஒரு நண்பனை ஜீவனுக்கு அறிமுகம் செய்துக் கொடுத்தாள்.

அந்த புத்தியிடம் பழகுவதைக் கொண்டு, இவன் தன் உண்மைத் தன்மையை அறிந்துக் கொள்வான் என்று ஆவலுடன் எதிர்ப்பார்த்தாள்.

ஆனால், இந்த ஜீவனோ, அந்த **புத்தி** என்ற பகுத்தறிவு கொண்ட நண்பனிடன் அளவிற்கு அதிகமாக நட்பு பாராட்டி, அவன் வாயிலாக அரிய உண்மையை அறிந்துக் கொள்வதற்குப் பதிலாக, அதே புத்தியின் வாயிலாக, அவசியமற்ற பல விசய சுகங்களை மட்டுமே அறிந்துக் கொண்டு, அவைகளையே ஆனந்தம் என்று கருதி, அதன் பின்னே ஓடிக்கொண்டிருந்தான். அந்த ஓட்டத்தின் காரணமாக, அந்த புத்தியை அறிமுகம் செய்து

வைத்த தன் அன்பு அம்மாவையே (ஆன்மாவை) மறந்தான்.

அனைத்து விசய, சுகங்களையும் தன் நண்பனான புத்தியின் ஆலோசனைப் படியே நடைமுறைப் படுத்துவானே தவிர, அவனை அறிமுகம் செய்து வைத்த தன் அன்பு அம்மாவின் அபரிமிதமான பேரறிவாற்றலை அறிந்துக் கொள்ளாமலேயே அனைத்தையும் செய்துக் கொண்டிருந்தான்.

இதுபோன்று, இவர்களது நட்பு இருந்த வந்த நிலையில், ஒருநாள் இந்த புத்தி என்ற நண்பன் ஜீவனை தன்னுடைய வீட்டிற்கு அழைத்துச் சென்றான்.

அங்கு ஜீவன் புத்தியின் சகோதரியான **"ஆசை"** என்பவளை சந்தித்தான். சந்தித்த மறுகணமே, அவள் மீது ஆசைக் கொண்டு, அவளையே புத்தியின் சம்மதத்துடன் திருமணமும் செய்துக் கொண்டான்.

அதன்பிறகு, ஜீவன் தன் **"ஆசை"** மனைவியின் ஆசைகளுக்குப் பிடித்தவாறு, அவளுடன் இணைப் பிரியாமல், இன்பத்துடன் வாழ்ந்துக் கொண்டு, அவளது அனைத்து தேவைகளையும் ஆர்வத்துடன் பூர்த்தி செய்து வந்தான்.

இதனால், இவர்கள் இருவரும் இன்பத்துடன் வாழ வேண்டும் என்றால், மக்கள் கூட்டம் அதிகம் உள்ள பகுதியில் இருந்தால் மட்டுமே, இன்னும் பல மகத்தான காரியங்களை ஆற்றி, பல்வேறு விசய சுகங்களை விருப்பத்துடன் அனுபவிக்க முடியும் என்ற ஆர்வத்தில், **'எண்ணங்கள்'** என்ற *மக்கள் கூட்டம்* நிறைந்த பகுதியில் வசிக்கத் தொடங்கினான்.

அதன்பிறகு, **'எண்ணங்கள்'** என்ற மக்கள் கொடுத்த அனேக விதமான வேலைகளை விருப்பத்துடன் செய்து, மிகவும் கடினமாக உழைத்து, எண்ணங்களின் வாயிலாக **'மனம்'** என்ற *பணம்* சம்பாதித்து, அதனைச் சேர்த்து, **'சித்தம்'** என்ற *வங்கியில்* மூதலீடு செய்து வைத்தான்.

இவ்வாறு, அதிகமாக '**சித்தம்'** என்ற வங்கியில் சேமித்து வைத்த '**மனம்'** என்ற பணத்தை கொண்டு, **'அஹங்காரம்'** என்ற வியாபாரத்தை விரிவு படுத்தத் தொடங்கினான்.

இந்த '**அஹங்காரம்'** என்ற வியாபாரம் நன்றாக விரிவடைந்து நடைப்பெற்றால்தான், **'சித்தம்'** என்ற வங்கியில் '**மனம்'** என்ற பணத்தை மேலும், மேலும் தாராளமாக முதலீடு செய்ய முடியும் என்ற நோக்கத்தில்

‘**எண்ணங்கள்’** என்ற மக்கள் கொடுத்த பல்வேறு விதமான வேலைகளை விருப்பத்துடன் செய்து வந்தான்.

இந்த **‘எண்ணங்கள்’** என்ற மக்கள் பழக்கத்தினால், **‘ஆன்மா’** என்ற அன்பு அம்மாவை மறந்து, **‘ஆசை’** என்ற தன் மனைவிக்கு மட்டுமே அதிக முக்கியத்துவம் கொடுத்து வந்தான்.

மேலும், ‘**எண்ணங்கள்’** என்ற மக்கள் மத்தியில் அதிகம் பழகி இருந்ததால், அவர்களிடம் காணப்பட்ட பல்வேறு எண்ணங்களான **பொறாமை, களவு, பொய், கோபம்** போன்ற, இன்னும் சில புதிய நண்பர்கள் இந்த ஜீவனுக்கு பழக்கமாயினர்.

இந்த **பொறாமை, களவு, பொய், கோபம்** போன்ற புதிய நண்பர்களின் சேர்க்கையினைக் கொண்டு, ஏற்கனவே தான் அமோகமாக நடத்திவந்த ‘**அஹங்காரம்’** என்ற வியாபாரத்தை மேலும் விரிவு படுத்தி, இன்னும் சற்று கூடுதலாக சம்பாதித்த *பண(மன)த்தை* **‘சித்தம்’** என்ற வங்கியில் முதலீடு செய்துக் கொண்டே இருந்தான்.

நாளுக்கு நாள் இந்த ஜீவனின், **‘அஹங்காரம்’** என்ற வியாபாரமும், **பொறாமை, களவு, பொய், கோபம்** போன்ற நண்பர்களும், பக்கபலமாக இருந்து **‘மனம்’**

என்ற பணத்தையும் பலமடங்கு பெருக்கி, **‘சித்தம்’** என்ற வங்கியிலே, மேலும், மேலும் சேமித்து வைத்த பண(மன)த்தினாலே, ஜீவன் தன் **‘ஆசை’** மனைவிக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்து, அவளது தேவைகளை பூர்த்தி செய்வதற்காக இன்னும் ஓடி ஓடி உழைத்துக் கொண்டிருந்தான்.

இவ்வாறு, **‘ஆசை’** மனைவியின் அதிகப்படியான தேவைகளை பூர்த்தி செய்யும் விதமாக இந்த ஜீவன் தான் சம்பாதித்த பண(மன)த்தைக் கொண்டு, பெரும் பண(மன)க்காரன் ஆகி விட்டதினால், மக்(எண்ணங்)கள் மத்தியில் அதிக செல்வாக்கு பெற்றான்.

இவனது அதிகப்படியான பண(மன) வளர்ச்சியைக் கண்டு சகிக்க முடியாத இவனது புதிய நண்பர்களான **பொறாமை, களவு, பொய், கோபம்** போன்றவர்கள் இவனது பண (மன) வளர்ச்சியைத் தடை செய்ய விரும்பி, இவனுக்கு **“துக்கம்”** என்ற ஒரு **வேசி**யை அறிமுகம் செய்து வைத்தனர்.

துக்கம் என்ற வேசியிடம் சிக்கிய இந்த ஜீவன் மிகுந்த பண(மன)த்தை அவளுக்கு கொடுத்து, (அதாவது மன உளைச்சலடைந்து) **‘ஆசை’** என்ற மனைவியை

விடவும் முடியாமல், **‘துக்கம்’** என்ற வேசியைத் தொடவும் முடியாமல் மிகவும் அலைக்கழிக்கப்பட்டான்.

இந்த அலைச்சலின் காரணமாக தன் பழைய நண்பன் ‘**புத்தி**’யை சுத்தமாக மறந்தே விட்டான். அத்துடன், தனக்கு புத்தியை அறிமுகம் செய்து வைத்த அன்பு அம்(ஆன்)மாவை முற்றிலுமாகவே மறந்து போய் விட்டான்.

இதனால், இவனிடத்தில் புதியதாக அறிமுகமான **‘துக்கம்’** என்ற வேசி இவனைத் தன்பிடியில் வலுவாக வைத்துக் கொண்டு, **‘ஆசை’** என்ற மனைவிக்காக இவன் ஆசை, ஆசையாகச் சேர்த்த பணத்தையெல்லாம் (மனத்தையெல்லாம்) தன் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டு, தன் இஷ்டப்படி ஜீவனைப் படாத பாடு படுத்தினாள்.

இதனால், ஜீவன் மேலும், மேலும் அதிக மன உளைச்சலுக்கு ஆளாகி, அனைத்து பணத்தையும் இழந்து, (மனச்சிதைவு அடைந்து) **‘துக்கம்’** என்ற வேசியின் காரணமாக இந்த பிரபஞ்சம் என்ற ஊரை (உடலை) விட்டே வெளியேறி விட்டான்.

ஜீவனால், தன் அன்பான அம்மா காட்டிக் கொடுத்த புத்தியை சரியாகப் பயன்படுத்திக் கொள்ளத் தெரியாமல், விபரீத புத்தியான ஆசையுடன் இணைந்து, மனதிற்கு அடிமையாகி, அஹங்காரத்தின் உச்சிக்கு ஏறி, ஆட்டம் பலப் போட்டான்.

இவ்வாறு இவன் போட்ட ஆட்டத்தின் முடிவில் துக்கம் என்ற வேசியின் பிடியில் சிக்கி, மனநோயினால் பாதிக்கப்பட்டு, அன்பு அம்மாவுடன் (ஆன்மாவுடன்) இணைந்து வாழ முடியாமல், வீணாக இந்த உடலை விடவேண்டி வந்தது.

நிறைவடைந்தது.



## கதையின் விளக்கக் குறிப்பு:–

இந்த உலக விவகாரத்தில் வெளிப்படையான உண்மை (Apparently Reality) என்னவெனில், ஒருவன் ஆசையின் காரணமாக, அறிவற்ற பலகாரியங்களைச் செய்து, பணத்தின் பின்னால் ஓடிக்கொண்டு, தனக்கு நன்மையை மட்டுமே விரும்பும் தாய் கூறும் புத்தி மதியை உதாசீனப்படுத்தி, அந்த தாயையும் அனாதை ஆக்கி அன்பு இல்லத்தில் சேர்த்துவிட்டு, பணத்திற்காகத் தன் பின்னால் வருகின்ற பலனற்ற உறவுகளை அவசியம் என்று கருதி, அதன் பின்னே சென்று, அறிய வேண்டியதை முழுமையாக (Absolute Reality) அறியாமல் அற்ப ஆசைகளினால், மனதிடம் சிக்கிக் கொண்டு, மடத்தனமான பல காரியங்களை செய்து, ஆடாத ஆட்டங்கள் பல ஆடி, முடிவில் தான் வந்த இந்தப் பிறவியின் நோக்கம் புரியாமலேயே, இந்த மனித உடலின் மகத்துவத்தை அறியாமலேயே மண்ணில் வீணாய் மடிகின்றான்.

இந்த கதையிலிருந்து ஒன்றேயான பரமா(ஆ)ன்மாவையும், அதன் பிரதிபிம்பமான, ஜீவனையும், ஒன்றென அறியத் தடையாக இருப்பது **‘ஆசை’** என்பதை அறிய வேண்டும்.

அப்படிப்பட்ட ஆசைகளை கண்ணிற்குத் தெரியாத சூக்ஷும மனமே தன் வாசனைகளாக (சம்ஸ்காரங்களாக) சேர்த்து வைத்துக் கொண்டு, அவைகளை பரு உடலின் வாயிலாக அனுபவிக்க விரும்பி, அதற்கேற்ற உடலை எடுத்துவந்து அனுபவித்துக் கொள்கின்றது.

அப்படிப்பட்ட மனமே, இந்த உடலைத் தான் பயணம் செய்யும் தேராகக் கொண்டு, அந்தத் தேரை (உடலை) சரியாக ஓட்டுகின்ற சாரதியாக (அறிவாக) சாக்ஷாத் அந்த பரமா(ஆ)ன்மாவை தன்னுள் வைத்துக் கொண்டு, தன் தேரின் (உடலின்) வாயிலாக, வாழ்க்கை என்ற பயணத்தை சரியாக மேற்கொள்ளுமானால், பயணத்தின் இறுதி இலக்கான இன்பத்தை எளிதாக சென்று அடைந்து விட முடியும்.

ஆனால், அதுவே ஆசைகளினால் (அறியாமை) கட்டுண்டு, அறிவை (ஆன்மாவை) மறந்து, இருக்கும்வரை இன்பம் என்ற இறுதி இலக்கை எளிதாக சென்று அடைந்திட முடியாது என்பதே இந்த கதையின் ஆழ்ந்த கருத்து.

வாழ்க்கை என்ற பயணம் உலகப் பொருட்களாகிய சாலை வழியாகத்தான் சென்றாக வேண்டும். அதாவது உலகப் பொருட்களிலிருந்து, உலகிலிருந்து விலக

முடியாது. நாம் எதைச் செய்ய வேண்டுமானாலும் உலகப் பொருட் களுடன் வாழ்ந்த படியேதான் செய்து, சாதிக்க வேண்டும்.

பயணத்தின் (வாழ்க்கையின்) வேகமும் வெற்றியும், குதிரைகளைப் (எண்ணங்களைப்) பொறுத்து அமைகிறது. குதிரையின் வேகம் கடிவாளத்தால் (மனதால்) கட்டுப்படுகிறது. கடிவாளத்தின் (மனதின்) இயக்கம் தேரோட்டியைப் (புத்தியை) பொறுத்தது.

எனவே, பயணத்தின் (வாழ்க்கையின்) வெற்றியோ தோல்வியோ தேரோட்டியால் (அறிவால்) மட்டுமே தீர்மானிக்கப்படுகிறது.

குதிரைகளுடன் (எண்ணங்களால்) போராடு வதினாலோ, கடிவாளத்தில் (மனதில்) மாற்றங்களைச் செய்வதினாலோ, எந்தப் பயனும் இல்லை.

தேரோட்டி (புத்தி) திறமைசாலியாக இருந்தால் மட்டுமே, பயணம் (வாழ்க்கை) எவ்விதத் தடங்கலுமின்றி சிறப்பாக நடைபெறும்.

தேரோட்டி (புத்தி) தூங்கிக் கொண்டிருந்தால் பயணம் (வாழ்க்கை) என்னவாகும்?

குதிரைகள் (எண்ணங்கள்) போகின்ற போக்கில், கடிவாளம் (மனம்) கட்டவிழ்ந்து, பல திசைகளில் குதிரைகள் (எண்ணங்கள்) பரந்து போகுமானால், அங்கு தேரோட்டி (புத்தி) விழிப்புடன் இல்லை என்பதை அறிந்து, இந்த சூழ்நிலையில் தேரோட்டியை (புத்தியை) எழுப்புவதே நாம் செய்ய வேண்டிய மிக முக்கியமான பணியாகும்.

**ஓம் தத் சத்!**

# அம்மா என்ற ஆன்மா!

## (சிறுகதை)



பயணத்தின் (வாழ்க்கையின்) வேகமும் வெற்றியும், குதிரைகளைப் (எண்ணங்களைப்) பொறுத்து அமைகிறது. குதிரையின் வேகம் கடிவாளத்தால் (மனதால்) கட்டுப்படுகிறது. கடிவாளத்தின் (மனதின்) இயக்கம் தேரோட்டியைப் (புத்தியை) பொறுத்தது.

எனவே, பயணத்தின் (வாழ்க்கையின்) வெற்றியோ தோல்வியோ தேரோட்டியால் (அறிவால்) மட்டுமே தீர்மானிக்கப்படுகிறது.

குதிரைகளுடன் (எண்ணங்களால்) போராடு வதினாலோ, கடிவாளத்தில் (மனதில்) மாற்றங்களைச் செய்வதினாலோ, எந்தப் பயனும் இல்லை.

தேரோட்டி (புத்தி) திறமைசாலியாக இருந்தால் மட்டுமே, பயணம் (வாழ்க்கை) எவ்விதத் தடங்கலுமின்றி சிறப்பாக நடைபெறும்.

தேரோட்டி (புத்தி) தூங்கிக் கொண்டிருந்தால் பயணம் (வாழ்க்கை) என்னவாகும்?

குதிரைகள் (எண்ணங்கள்) போகின்ற போக்கில், கடிவாளம் (மனம்) கட்டவிழ்ந்து, பல திசைகளில் குதிரைகள் (எண்ணங்கள்) பரந்து போகுமானால், அங்கு தேரோட்டி (புத்தி) விழிப்புடன் இல்லை என்பதை அறிந்து, இந்த சூழ்நிலையில் தேரோட்டியை (புத்தியை) எழுப்புவதே நாம் செய்ய வேண்டிய மிக முக்கியமான பணியாகும்.